# இனிக்காத சீனி (நாடகம்)

# இனிக்காத சீனி (நாடகம்)

இனிக்காத சீனி (நாடகம்)

நிர்மலா ராகவன்

nirurag@gmail.com

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com



அட்டைப்படம் - எம்.ரிஷான் ஷெரீப் - mrishansha@gmail.com

மின்னூலாக்கம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

This book was produced using pandoc

பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/inikaatha_seeni_drama}

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com
அட்டைப்படம்: எம்.ரிஷான் ஷெரீப் - mrishansha@gmail.com
மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com
மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

Ebook Publisher: http://freetamilebooks.com
Cover Image: M.Rishan Serif - mrishansha@gmail.com
Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com
Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

பதிவிறக்கம் செய்ய - http://freetamilebooks.com/ebooks/inikaatha_seeni_drama

This Book was produced using LaTeX + Pandoc

**பாத்திரங்கள்**
**முருகேசு – 52**
**சதீஷ் – 34**
**ராமசாமி – 50**
**உமா – 22**
**சுமி –23**

# காட்சி 1 (முருகேசு, உமா)

**முரு:** அடுத்த வருஷம் பட்டம் வாங்கிடுவே, இல்லே உமா?

**உமா:** ஆமாம்பா. தெரிஞ்சுக்கிட்டே கேக்கறீங்களே!

**முரு:** சும்மா சொல்லேம்மா. ஒன் வாயாமுரு:ல அதைக் கேட்டா, அதில எனக்கு ஒரு சந்தோஷம்.

**உமா:** போங்கப்பா.

**முரு:** ரொம்ப பெருமையா இருக்கு. நம்ப குடும்பத்திலே மொதமொதலா இவ்வளவு படிச்ச பொண்ணு நீதான்.

**உமா:** பொண்ணுன்னா அடங்கித்தான் இருக்கணும், எப்பவும் ஆம்பளைங்களுக்கு விட்டுக்குடுக்கணும்னு எல்லாம் நீங்க கத்துக் குடுக்கலியே, அப்பா! அதனால நான் பிழைச்சேன்.

**முரு:** அடக்கம் வேண்டியதுதான். ஆனா, தன்னோட புத்திசாலித்தனத்தை மறைக்கற அளவுக்கு இருந்தா, அது யாருக்கு நஷ்டம், சொல்லு. வீட்டுக்கு, நாட்டுக்கு எல்லாருக்கும்தான்.

**உமா:** அப்பா! என் ஃப்ரெண்ட்ஸ் சிலபேர்.. நிறையப் படிச்சு முன்னுக்கு வந்துட்டா, அது ஆம்பளைங்களுக்குச் செய்யற துரோகம் என்கிறமாதிரி.. ஏதோ ஒரு குத்த உணர்ச்சி அவங்களுக்கு. ஆனா, எனக்கு அந்தக் குழப்பம் எல்லாம் இல்ல. எப்படிப்பா?

**முரு:** அவங்க குடும்பத்தில அப்படி சொல்லிச் சொல்லி வளத்திருப்பாங்க.

**உமா (அதிசயப்பட்டு):** முன்னுக்கு வரக்கூடாதுன்னுகூடச் சொல்வாங்களா..!

**முரு:** நம்ப பொண்ணு முன்னுக்கு வர்றதை நாம்பளே தடுக்கறோம்கிறதே புரியாம, `என்ன இருந்தாலும், ஒங்க அண்ணன் ஆம்பளை! நீ அவனுக்குச் சரியா பேசி, போட்டி போடக்கூடாது!' – இந்த மாதிரிதான் தினமும் பேசுவாங்க.

**உமா:** நல்ல வேளை, எனக்கு அண்ணன் இல்ல.

**முரு(லேசாகச் சிரித்து):** அண்ணன் இல்லாட்டி என்ன! ஒன்னைத் தனியா மேல்படிப்புக்கு கே.எல் (K.L) அனுப்பினப்போ, அத்தையும், பாட்டியும் எவ்வளவு தடுத்தாங்க!

**உமா:** அதான் எனக்குப் புரியல. நான் படிச்சு, பெரியாளா வந்தா, அவங்களுக்குச் சந்தோஷம் இல்லியாப்பா?

**முரு:** அப்படி இல்லம்மா. வயசானவங்க அவங்க காலத்தையே நெனைச்சுக்கிட்டுப் பேசறாங்க. பொண்ணை பத்திரமா கட்டிக் காத்து, ஒருத்தன்கிட்ட ஒப்படைச்சாதான் அவங்களுக்கு நிம்மதி.

**உமா (லேசான கோபத்துடன்):** கட்டிக் காக்கணுமா? என்மேல எவனாவது தப்பா கைவெச்சா, ஒரே ஒதை!

**முரு:** (சிரிப்பு)

**உமா:** நெஜமாத்தாம்பா சொல்றேன். ஜூடோ பழகறப்போ, எங்களுக்கு மொதல் பாடமே அதுதான் – தற்காப்பு.

**முரு:** அதை நீ சொல்றது இது நூறாவது தடவை. பொண்ணுங்க நிறையப் படிச்சா, இன்னொரு பிரச்னையில்ல!

**உமா:** பிரச்னையா?

**முரு:** ஆமா. அவங்களைவிட அதிகமா படிச்ச மாப்பிள்ளை தேடணுமே!

**உமா:** அப்படியானா, பொண்ணைவிட குறைஞ்ச படிப்பு உள்ளவனா பாக்கறது!

**முரு(சிரித்து):** சுலபமா பணக்காரனா ஆகலாம், சமூகத்தில ஒரு ஒசந்த எடத்தைப் பிடிக்கலாம்னு கணக்குப் பண்ணி, ரொம்ப சிலபேர்தான் இப்படிப் பண்ணிப்பாங்க. அப்புறம், அவ எது பேசினாலும், `படிச்ச திமிர்'னு ஏசுவாங்க. ஒண்ணு.., அவ அடங்கிப் போகணும். இல்லாட்டி, பிரிஞ்சு போகணும்.

**உமா:** ஐயையோ!

**முரு:** தன்மானமுள்ள எந்த ஆம்பளையும் தனக்கு மேல இருக்கிற பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்க முன்வரமாட்டான்.

**உமா:** ஏம்பா ஆம்பளைங்களுக்கு இவ்வளவு..? என்ன சொல்றது – அவங்கமேலேயே நம்பிக்கை இல்லியா?

**முரு:** அப்படித்தான் வெச்சுக்கயேன். ஒலகத்திலே இருக்கிற எல்லா நாடுங்களிலேயும் பொண்ணுங்கதான் இன்னும் நல்லாப் படிக்கிறாங்களாம். அன்னிக்குப் படிச்சேன். அவங்களுக்கு எப்படியாவது முன்னுக்கு வரணும்கிற வெறி இருக்கு.

**உமா:** நல்லதுதானே!

**முரு:** ரொம்ப காலமா, ஒலகம் ஆம்பளைங்க கையிலதானே இருக்கு. அதனால இப்போ அவங்களுக்குப் பயம் வந்திடுச்சு.

**உமா:** பயமா! என்ன பயம்?

**முரு:** கொஞ்சம் இடம் குடுத்தா, எங்கே இந்த பொண்ணுங்க நம்பளை மிஞ்சிடுவாங்களோன்னுதான்.

**உமா (வியந்து):** ஒங்களுக்கு எப்படிப்பா இவ்வளவு விஷயம் தெரியுது!

**முரு:** வயசானா, தானே ஒனக்கும் தெரியும். பேச்சைக் கொறைச்சு, நம்பளைச் சுத்தி நடக்கறதை கவனிச்சு, ஏன், எப்படின்னு நிறைய யோசிக்கணும். சரி, அதை விடு.. ஏன் உமா, இப்போ நீ ஹாஸ்டல்லே தங்கறதில்லியா? அன்னிக்கு ஃபோன்ல என்னமோ சொன்னியே!

**உமா:** எங்க யுனிவர்சிடியில படிக்கிற பொண்ணோட அவ அபார்ட்மெண்டில தங்கயிருக்கேம்பா.

**முரு:** எதுக்கு உமா இன்னொருத்தருக்கு தொந்தரவு குடுத்துக்கிட்டு?

**உமா:** அப்படியெல்லாம் இல்லப்பா. ஹாஸ்டல் சாப்பாடு எனக்குப் பிடிக்கல. வயிறு கெட்டுப்போகுது. சுமிதா என்கூடப் படிக்கிறவ. அவளேதான் கூப்பிட்டா.

**முரு:** தனியா தங்கற அளவுக்கு வசதி உள்ள பொண்ணா?

**உமா:** அப்படித்தான் தெரியுது. ஒரு மாச வாடகையே இரண்டாயிரத்து ஐந்நூறுன்னா பாத்துக்குங்களேன்! நீச்சல் குளமெல்லாம் இருக்கு.

**முரு:** அப்படி எத்தனை பேர் இருக்கீங்க?

**உமா:** நானும் அவளும்தாம்பா.

**முரு:** அவ பேரு சொல்லலியே!

**உமா:** சுமிதா. எங்க அபார்ட்மெண்டில பெரிசா ரெண்டு ரூம் இருக்கு.

**முரு:** நீங்க படிக்கிற எடத்தில எவ்வளவோ பேர் இருக்காங்க. ஒன்னை மட்டும் எதுக்குக் கூப்பிட்டா அந்த சுமிதா? எனக்கென்னமோ சரியாப் படல.

**உமா (செல்லமாகச் சிணுங்கி):** என்னப்பா, நான் என்ன சின்னப்பிள்ளையா! என்னைப் பாத்துக்க எனக்குத் தெரியாதா? சுமி என்னை என்ன செஞ்சுடுவா! நான் ஒண்ணும் சும்மா இருக்கல. என் பங்குக்கு நூறு வெள்ளி குடுத்துடறேன்.

**முரு:** மொத்த வாடகை இரண்டாயிரத்து ஐந்நூறு. நீ குடுக்கிறது வெறும் நூறுதானா? நம்ப முடியலியே! எல்லாத்துக்கும் கணக்குப் பாக்கற இந்த காலத்திலே..

**உமா:** அதைத் தவிர, வீட்டைச் சுத்தப்படுத்தறது, சமையல் எல்லாம் என் வேலை! சுமி கேக்கல. நானேதான் செய்யறேன், அவளுக்குப் பாரமா இருக்கக்கூடாதுன்னு.

**முரு:** என்னமோ, போ! வீட்டு வேலை, அது, இதுன்னு இழுத்துப் போட்டுக்கிட்டு, படிப்பில கோட்டை விட்டுடாதே.

# காட்சி 2 (சுமி, உமா)

**சுமி:** என்ன உமா, இன்னிக்கு ஞாயித்துக்கிழமை. என்ன பண்ணப்போறே?

**உமா:** என்ன கேள்வி, சுமி! தினமும் பண்றதைத்தான் இன்னிக்கும்..

**சுமி (இடைமறித்து):** எப்பவும் புத்தகங்களைக் கட்டிக்கிட்டு மாரடிக்க ஒன்னால எப்படித்தான் முடியுதோ!

**உமா(சிரித்து):** அதுக்குத்தானே நான் இங்க வந்திருக்கேன். படிக்காட்டி, எப்படி சுமி பாஸ் பண்ண முடியும்?

**சுமி:** ஒன் படிப்பை எனக்காக இன்னிக்கு கொஞ்சம் தியாகம் பண்ணேன்.

**உமா:** தியாகமா? என்ன, ஒன் புடவைங்களுக்கு இஸ்திரி போடணுமா?

**சுமி:** சேச்சே! லாண்டரியில குடுத்தா போச்சு.

**உமா:** வேற என்ன வேலை, சுமி?

**சுமி:** வேலையெல்லாம் இல்ல. எங்கூட இன்னிக்கு வர்றே. நான் ஒருத்தரை ஒனக்கு அறிமுகப்படுத்தி வைக்கப்போறேன்.

**உமா:** யாராச்சும் புரொபசரா?

**சுமி(அலுத்து):** ஐயோ! ஐயோ! நீ ஒரு போர் (BORE), உமா. ஒனக்குப் படிப்பைத் தவிர வேற ஒண்ணுமே யோசிக்கத் தெரியாதா?

**உமா:** ஒனக்கென்ன சுமி, நீ பணக்காரக் குடும்பத்தில பிறந்த பொண்ணு. நான் அப்படியா! எங்கப்பா வெறும் பள்ளிக்கூட ஆசிரியர். அவரால கைநிறைய பணம் குடுக்க முடியாது. புத்திமதிதான் அங்க கிடைக்கும்.

**சுமி(சிரித்து):** நீ எனக்குப் புத்தி சொல்லாதவரைக்கும் எனக்கு ஃப்ரெண்டா இருக்கலாம். அது சரி, நான் பணக்காரக் குடும்பத்தில பிறந்தவ(ள்)ன்னு எதை வெச்சுச் சொல்றே உமா?

**உமா:** இது என்ன கேள்வி, சுமி! நீ போடற டிரெஸ், வித விதமா வளை, நெக்லஸ், அப்புறம்.. இந்த அபார்ட்மெண்ட்..

**சுமி:** நீ சொல்ற எதுவுமே எனக்கு எங்கப்பா குடுத்ததில்ல. ஏன்னா, நான் சின்னப்பிள்ளையா இருக்கிறப்போவே அவர் எங்கம்மாவை விட்டுப் பிரிஞ்சு போயிட்டாரு. அப்போ எனக்கு அஞ்சு வயசுதான் அவங்க சண்டை போட்டுக்கிட்டதுதான் நினைவிருக்கு.

**உமா:** அப்பா இல்லாட்டி, சித்தப்பா, இல்லே மாமா.

**சுமி:** நீ சொல்றது ஒரு விதத்தில கரெக்ட், உமா. ஆனா, இவங்க யாரும் எங்கம்மாவோடேயோ, அப்பாவோடேயோ கூடப்பிறந்தவங்க இல்ல. நானா ஏற்படுத்திக்கிட்ட சொந்தம்.

**உமா:** புரியலியே!

**சுமி:** SUGAR DADDY அப்படின்னு கேள்விப்பட்டிருக்கியா?

**உமா:** ஊகும். SUGAR அப்படின்னா சீனி. DADDY – அப்பா. அது என்ன, சீனி அப்பா? வேடிக்கையா இருக்கே!

**சுமி(இளக்காரமாக):** வாழ்க்கையில நீ படிக்க வேண்டியது நிறைய இருக்கு, உமா. சும்மா புத்தகங்களைப் படிச்சு மார்க்கு வாங்கிட்டா மட்டும் போதுமா?

**உமா (போலிப் பணிவுடன்):** சரிங்க டீச்சர். கொஞ்சம் விளக்கமாத்தான் சொல்லி, என் மரமண்டைக்குப் புரிய வைங்களேன்.

**சுமி:** அப்படி வா, வழிக்கு. நான் அடிக்கடி வெளியில சாப்பிடறது ஒனக்குத் தெரியும்தானே?

**உமா:** ஆமா? நான்கூட `ஒனக்கு எப்படித்தான் கடைச் சாப்பாடு ஒத்துக்குதோ!'ன்னு ஆச்சரியப்படுவேனே! அதோட, அநாவசியமான செலவில்ல! நாம்பளே சமைச்சு சாப்பிட்டா..

**சுமி:** நானா செலவழிக்கிறேன்?

**உமா:** பின்னே? சும்மாவா சாப்பாடு போடுவாங்க?

**சுமி:** சாப்பிட காசு குடுக்கணும்தான். ஆனா குடுக்கறது என்னோட கம்பெனிக்காக வர்ற பெரிய மனுஷங்க.

**உமா:** நீ கம்பெனி வேற வெச்சிருக்கியா சுமி? எனக்குத் தெரியாதே!

**சுமி:** ஒன் முட்டாள்தனத்துக்கு மன்னிப்பே கிடையாது, உமா. கம்பெனின்னு நான் சொன்னது, தனியா சாப்பிடப் பிடிக்காம, என்னை மாதிரி ஒரு படிச்ச, இளம்பொண்ணுகூட சாப்பிடணும்னு ஆசைப்பட்டு, அதுக்காக காசு குடுக்கறாங்களே, அந்த ஏற்பாட்டைச் சொன்னேன்.

**உமா:** இரு, இரு. நான் புரிஞ்சுக்கிட்டது சரியான்னு பாக்கறேன். நீ அவங்களோட சேர்ந்து சாப்பிடறதைப் பெரிய பாக்கியமா கருதி, சில பேர் அதுக்காக ஒனக்கு காசு குடுக்கறாங்களா! ஆம்பளைங்கன்னு நினைக்கிறேன்.

**சுமி:** அப்பாடி! இதையாவது புரிஞ்சுக்கிட்டியே! கொஞ்சம் இரு. என்னோட லாப் டாப்பை (LAP TOP) எடுத்திட்டு வரேன். (இசை) இதோ பாத்தியா? ஒரு இணைய தளமே இருக்கு இதுக்கு.

(கோடூரமான இசை)

**சுமி:** என்ன உமா? பாத்தேயில்ல? என்ன, பேச்சையே காணும்?

**உமா:** என்னால நம்ப முடியல, சுமி. `பதினெட்டு வயசுப்பெண். ஒரு இரவு உங்களுடன் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிட ஆயிரம் வெள்ளி'ன்னு எழுதியிருக்கா.

**சுமி:** FORM SIX படிக்கிறப்போ, நானும் அப்படித்தான் ஆரம்பிச்சேன்.

**உமா:** எதுக்காக சுமி இந்தப் பழக்கம்?

**சுமி:** `எதுக்காக இந்த கெட்ட பழக்கம்?' அப்படின்னு நைசா கேக்கறியா?

**உமா (பயந்து):** நான் அப்படிக் கேக்கலியே!

**சுமி:** நல்லது, கெட்டது எல்லாம் நம்ப மனசிலதான் இருக்கு, உமா. அப்பா இல்லாத குடும்பத்திலே, ஏழையா வளர்ந்து, தாராளமா செலவழிக்கிற மத்தவங்களைப் பாத்து ஏக்கப் பெருமூச்சு விட்டுக்கிட்டு..! எதுக்காக இப்படி இருக்கணும்னு எனக்கு வெறுத்துப்போச்சு.

**உமா(மௌனம்)**

**சுமி:** மொதல்லே இருநூறுதான் கேட்டேன். ஃபோன்கால் மேல கால் வந்திச்சு. அப்புறம் படிப்படியா ஏத்திட்டேன். இப்போ, இந்த அபார்ட்மெண்டுக்கு வாடகை ஒருத்தர் குடுக்கிறார். என் கைச்செலவுக்கு, அப்புறம் நீ பாக்கிற நகைங்க எல்லாம் இன்னொருத்தரோட உபயம். (சிரிப்பு)

**உமா:** கேக்கவே ஒரு மாதிரி இருக்கு, சுமி. பல பேரை நீ வெச்சு.. (கனைத்து) இந்த மாதிரி பல பேர் இருக்காங்களா?

**சுமி:** நீ தப்பா நினைக்கிறே, உமா. அவங்க.. கொறைஞ்சபட்சம், என் கையைக்கூடப் பிடிக்கறதில்ல. எதைப்பத்தி வேணுமானாலும் பேசுவோம். அவ்வளவுதான். இந்தமாதிரி ஏற்பாட்டில என்ன சௌகரியம்னு கேளேன்.

உமா(அசுவாரசியமாக): நான் கேக்காம போனா மட்டும் நீ சொல்லாம விடப்போறியா? சொல்லு.

**சுமி:** ஒருத்தர்மேல `காதல்'னு வந்தா, பிரியறப்போ, வருத்தம், ஏக்கம், தன்னம்பிக்கை குறைஞ்சுபோறது, இப்படி என்னென்னமோ வரும்னு சொல்றாங்களே! இதில அப்படி எதுவும் கிடையாது. பிடிக்காட்டி, விலகிடலாம். நமக்கு ஏத்தவரா இன்னொருத்தர் இல்லாமலா போயிடுவார்!

**உமா:** ஒரு பேச்சுக்குக் கேக்கறேன், சுமி. ஒனக்கு வரப்போற கணவருக்கு நீ இப்படி– அது என்ன வார்த்தை? – ம்.. கம்பெனி குடுத்தது – தெரியவந்தா, அவரால அதை ஏத்துக்க முடியுமா?

**சுமி:** மொதல்லேயே சொல்லிடுவேன். அவனுக்குப் பிடிக்காட்டி, இவ்வளவு பிற்போக்கானவன் எனக்கு வேண்டவே வேண்டாம்னு ஒதுங்கிடுவேன். (அவசரமாக) ஓ! பேசிக்கிட்டே இருந்ததில நேரம் போனதே தெரியல பாரு. இன்னிக்கு காலையிலேயே ஒருத்தரைச் சந்திக்க வர்றதா ஒத்துக்கிட்டிருக்கேன். (பெருமையுடன்) எங்க தெரியுமா? அஞ்சு நட்சத்திர ஹோட்டல்ல..! வரட்டா?

**உமா(சுரத்தில்லாமல்):** பை (BYE)!

**சுமி:** பை, பை, உமா பாட்டி! கவலைப்படாதீங்க, நான் முழுசா திரும்பி வந்துடுவேன். (சிரிப்பு).

# காட்சி 3 (ராம, சுமி)

**ராம:** ஹலோ! என்ன சுமி? எப்பவும் எனக்கு முன்னாலேயே வந்துடுவியே! இவ்வளவு நேரமா காணுமேன்னு பாத்தேன்.

**சுமி:** ஸாரி ஸார். லேட்டாயிடுச்சு. காலையில சீக்கிரம் எழுந்திருக்கிற பழக்கமில்ல எனக்கு.

**ராம:** படிக்கிற பொண்ணு! இப்படிப் பேசினா எப்படி?

**சுமி:** நாலு வருஷமா ஒங்களோட சேர்ந்து சாப்பிட வரேன்ல? ஒலகத்தில இருக்கிற கதையெல்லாம் பேசிட்டு, வீட்டுக்குப் போறப்போ லேட்டாகிடுது. மறுநாள் காலையில எப்படி சீக்கிரம் எழுந்திருக்கிறது!

**ராம:** அடேயப்பா! நாலு வருஷமாவா நாம்ப சந்திச்சுக்கிட்டு இருக்கோம்! எனக்கென்னவோ பிறந்ததிலிருந்தே ஒன்கூட பழகினமாதிரி இருக்கு.

**சுமி(சிரிப்பு):** நீங்க பிறந்தப்போ, நான் பிறந்தே இருக்க மாட்டேனே!

**ராம:** இதுதானே வேண்டாங்கிறது! வயசானவன்னு மறைமுகமா குத்தறே, பாத்தியா?

**சுமி:** ஐயோ, இல்ல ஸார். ஒங்களுக்கோ கல்யாணமாகி, ஒரு மகளும் இருக்காங்க. நீங்கதான் சொல்லி இருக்கீங்களே! நான் இன்னும் படிச்சுக்கிட்டுதானே இருக்கேன். அந்த அர்த்தத்தில சொன்னேன். தப்பா எடுத்துக்காதீங்க.

**ராம:** நாப்பத்தஞ்சு வயசுக்கு மேலே ஆனவன் இப்படி எதுக்கு வர்றான்னு கேக்கறியா சுமி?

**சுமி:** ஒங்களுக்குச் சொல்லணுமானா சொல்லலாம். பேசத்தானே வந்தோம்!

**ராம:** கேளு. என் மனைவிக்கு மனநோய். எப்பவும், தானே சிரிச்சுக்கிட்டு, அழுதுக்கிட்டு..! வீட்டில எந்த வேலையும் செய்ய அவளால முடியாது. அதனால, சின்ன வயசிலேயே எங்க மகளை ஒரு ஹாஸ்டல்லே சேத்துட்டேன். எனக்கு கோடிக்கணக்கான சொத்து இருக்கு.

**சுமி(பிரமிப்புடன்):** அப்..பாடி!

**ராம:** விதவிதமான பிசினஸ். பணம் குவிஞ்சுக்கிட்டே இருக்கு. இருந்தாலும், என்ன பிரயோசனம்! வாழ்க்கையில ஒரு சந்தோஷம் வேணாம்?

(இசை)

**ராம:** நல்லா சாப்பிடு, சுமி. எப்பவுமே டயட்டா? ஒன் ஒடம்பு அப்படி ஒண்ணும் குண்டாகிடாது. பயப்படாம சாப்பிடு. படிக்கத் தெம்பு வேணாம்?

**சுமி(அலுத்து):** ஐயோ! லீவு நாளிலகூட எதுக்கு ஸார் படிப்பை ஞாபகப்படுத்தறீங்க!

**ராம:** நான் அதிகம் படிக்காதவன், சுமி. எனக்கு எப்பவுமே அந்தக் குறை உண்டு. அதனால, படிச்சவங்களைப் பாத்தா ஒரு மதிப்பு. அவங்களோட பழகறதில ஒரு சந்தோஷம்.

**சுமி(தனக்குள்):** அதனால நான் பிழைச்சேன்.

# காட்சி 4 (உமா, முரு)

## (தீபாவளி சமயம்)

**உமா (செல்லமாக):** அப்..பா!

**முரு:** வா உமா. தீபாவளிக்கு இன்னும் நாலு நாள்தானே இருக்கு, இன்னும் இந்தப் பொண்ணைக் காணோமே அப்படின்னு நினைச்சுக்கிட்டே இருந்தேன்.

**உமா:** காலேஜில இன்னும் பாடம் நடத்திக்கிட்டு இருக்காங்கப்பா. ஆனா, நான் வந்துட்டேன்.

**முரு:** நல்லதாப் போச்சு! சோபாவில சாஞ்சுக்கிட்டு, ஊர்க்கதையெல்லாம் பேசலாம். மொதல்ல என்ன குடிக்கறே?

**உமா:** நீங்க இருங்கப்பா. நான் போய் டீ கலக்கிட்டு வரேன்.

(இசை)

**முரு:** நானும் இதே தேத்தூளு, பால், சீனிதான் போடறேன். எனக்கு இந்த ருசி வரமாட்டேங்குதே! (உறிஞ்சிக் குடிக்கிறார்) ம்? அப்புறம்..? அங்க என்ன சமாசாரம்?

**உமா:** எதைப்பத்திப்பா கேக்கறீங்க?

**முரு:** ஒன்கூட தங்கியிருக்கே ஒண்ணு, அதைப்பத்திதான் கேக்கறேன்.

**உமா (சற்று வருந்தி):** என்னப்பா.., நீங்ககூட..! அவ பேரு சுமி. அன்னிக்கே சொன்னேன்ல?

**முரு:** அவதான். முன்னேபின்னே தெரியாத ஆம்பளைங்களோட சாப்பிடப் போய், காசு வாங்கறான்னு சொன்னியே!

**உமா:** எனக்கும் மொதல்ல அவ சொன்னப்போ, இப்படித்தான் ஒங்களைமாதிரி அதிர்ச்சியா இருந்திச்சு. ஆனா, அவ தப்பா எதுவும்

செய்யறமாதிரி தெரியல.

**முரு:** எங்க காலத்தில, உமா, `நல்லவனாத்தான் இருக்கணும், அதனால காசு பணம் சேராட்டியும் பரவாயில்ல'ன்னு பிடிவாதமா இருந்தவங்கதான் ஆசிரியத் தொழிலுக்குப் போனோம்.

**உமா:** மத்தவங்க?

**முரு:** தில்லுமுல்லு பண்ணி பணம் சேர்க்க எத்தனை தொழிலுங்க இருக்கு! அதில ஏதோ ஒண்ணு.

**உமா:** நீங்க எங்க வர்றீங்கன்னு புரியுது. ஆனா, சுமி செய்யறது சட்ட விரோதம் இல்லப்பா. இரவு பகலா ஒழைச்சுட்டு, கொஞ்சம் மன நிம்மதி வேணுங்கிறவங்களுக்கு.. பேச்சுத்துணை அவ. அவ்வளவுதான்.

**முரு:** ஏன் உமா, நான்தான் கேக்கறேன், பேச்சுத்துணை வேணும்னு வர்றாங்களே, அவங்களுக்கு வீட்டில யாருமே கிடையாதா?

**உமா:** அவங்களோட எல்லாம் ஒத்துப் போகாததாலதானேப்பா பணம் குடுத்தாவது துணை தேடறாங்க! பிடிக்காட்டி, சுலபமா கத்தரிச்சுடலாம் பாருங்க!

**முரு:** என்ன உமா, ரொம்பத்தான் வக்காலத்து வாங்கறே, ஒன் ஃப்ரெண்டுக்கு! விட்டா, நீயும் அவகூட போயிடுவே போல இருக்கே!

**உமா:** போங்கப்பா.

# காட்சி 5 (உமா, சுமி)

**சுமி:** உமா! ஒங்கிட்ட ஒரு சந்தோஷமான செய்தியைச் சொல்லப்போறேன். அதைக் கேட்டு நீ அப்படியே மயக்கம் போடப்போறே!

**உமா(சிரித்து):** இரு.இரு. முன்னெச்சரிக்கையா ஒரு கிளாசில தண்ணி கொண்டு வெச்சுக்கறேன்.

**சுமி:** என்னோட SUGAR DADDY-ங்கள்ல ஒருத்தர். கோடீஸ்வரர். என்னைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைன்னு சொன்னார். நானும்

சரின்னுட்டேன்.

**உமா:** வாழ்த்துக்கள், சுமி. DADDY ங்கிறே. அவருக்கு எத்தனை வயசு இருக்கும்?

**சுமி(அலட்சியமாக):** நாப்பத்தஞ்சுக்குமேல. அதனால என்ன!

**உமா:** அது ஒன் சொந்த விஷயம். ஆமா, இத்தனை வயசுவரைக்கும் ஏன் கல்யாணம் பண்ணிக்காம இருந்தாராம்?

**சுமி:** கல்யாணம் ஆனவர்தான்.

**உமா(அதிர்ந்து):** சுமி!

**சுமி:** ஆனா, மனைவிகிட்டேயிருந்து ஒரு கடிதம் வாங்கிட்டாராம்– `இவர் ரெண்டாவது கல்யாணம் பண்ணிக்கிறதில எனக்கு ஒரு ஆட்சேபமும் இல்லே'ன்னு.

**உமா:** அப்புறம் சிக்கல் எதுவும் வராட்டி சரி.

**சுமி (எரிச்சலுடன்):** ஒனக்கு எப்பவுமே குதர்க்கம்தான் உமா. ஒங்கிட்ட போய் சொல்றேன், பாரு.

**உமா:** கோவிச்சுக்காதே சுமி. நீ நல்லா இருந்தா, எனக்கும் சந்தோஷம்தான். எப்போ கல்யாணம்?

**சுமி:** பதிவுத் திருமணம்தான். நீ ஒரு சாட்சி, என் சார்பா.

**உமா:** கண்டிப்பா.

**சுமி:** அப்புறம்.. உமா!

**உமா:** சொல்லு சுமி.

**சுமி:** இந்த அபார்ட்மெண்டுக்கு வாடகை குடுக்கிறதே அவர்தான். நான் இங்க இருக்க மாட்டேன். எங்களுக்கு வேற ஒரு – தனி பங்களா – பாத்து வெச்சிருக்கார்.

**உமா:** அவ்வளவுதானே! நான் காலி பண்ணிடறேன்.

**சுமி:** இன்னும் ரெண்டு மாசம் இருக்கலாம். அட்வான்ஸ் குடுத்திருக்கு.

**உமா:** ஆமா? ஒன் படிப்பு? ஒன்னை காலேஜில பாக்க முடியும்தானே?

**சுமி:** இல்ல உமா. நாம்ப படிக்கிறது எதுக்கு? படிச்சுப் பாஸ் பண்ணினா, நல்ல வேலை கிடைக்கும், கைநிறைய சம்பாதிக்கலாம்னு.

**உமா:** அதனால..?

**சுமி:** இனிமே படிச்சு என்ன செய்யப்போறேன்? மொதல்லே.., படிப்பில மனசு போகுமாங்கிறதே சந்தேகம். அவர் இப்பவே ரெண்டு லட்சத்தை என் பேரில பாங்கில போட்டிருக்கார்.

**உமா:** பலே! இனிமே ஒன்னை `ஸிண்டரெல்லா'ன்னுதான் (CINDERELLA) கூப்பிடணும்.

**சுமி(லேசான சிரிப்புடன்):** ஏன்?

**உமா:** ஸிண்டரெல்லாங்கிற ஒரு ஏழைப் பொண்ணை ராஜகுமாரன் ஒருத்தன் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்ட கதை கேட்டதில்லையா? அந்த கதாநாயகி மாதிரிதானே நீயும்!

(இருவரும் மகிழ்ச்சியுடன் சிரிக்கிறார்கள்)

# காட்சி 6 (உமா, சதீஷ்)

**சதீ:** என்ன உமா இப்படி வியர்க்குது, ஒனக்கு? இதுதான் முதல் தடவையா?

**உமா:** ஆமாம் சதீஷ். எனக்கு இந்தமாதிரி.. காசு கிடைக்குதேன்னு சாப்பிட வரதெல்லாம் பழக்கமில்ல.

**சதீ:** தானே ரெண்டு தடவை வந்தா பழகிடுது. எனக்கு சுமியை நல்ல பழக்கம். அவளை ரொம்ப நாளா காணோமேன்னு, நான் ஃபோன் செஞ்சப்போ, நீ எடுத்துப் பேசினே. ஒன்னை எவ்வளவு வற்புறுத்த வேண்டியிருந்திச்சு! (சிரிப்பு)

**உமா:** எங்கப்பாவுக்கு நான் இப்படி வந்திருக்கிறது தெரிஞ்சா, உசிரையே விட்டுடுவாரு.

**சதீ:** வயசானவங்களை விடு. அவங்களுக்கு வாழ்க்கையை அனுபவிக்கத் தெரியாது. எனக்கு முப்பத்தஞ்சு வயசாகுது. பிரம்மச்சாரி. மாசம் இருபத்தஞ்சாயிரம் சம்பளம். எத்தனையோ பெண்ணைப் பெத்தவங்க நெருக்கறாங்க. எனக்குத்தான் ஜாலியா இருக்கலாமேன்னு தோணிச்சு. வாழ்க்கையை எல்லா விதத்திலும் அனுபவிச்சுப் பாத்துடணும். என்ன சொல்றே?

**உமா (யோசிக்கிறாள்):** ம்...

**சதீ:** சும்மா பேசறதுக்கு அப்படின்னுதான் ஒன்னைக் கூப்பிட்டேன். இப்போ, ஒன்னைப் பாத்ததும் இன்னொரு ஐடியா வருது. இன்னிக்கு என் கூடவே தங்கிடேன்? இரண்டாயிரம் குடுக்க..

உமா(கோபமாக): நிறுத்துங்க, சதீஷ். நீங்க யோக்கியமானவரா இருப்பீங்கன்னு நினைச்சுத்தான் பேச வந்தேன்.

**சதீ:** சுமியோட நல்ல பழக்கம்னு சொல்லிக்கிறே. அதனால நீயும் அவளைமாதிரிதான் இருப்பேன்னு நினைச்சுட்டேன்.

**உமா (விறைப்பாக):** அவ ஒண்ணும் அப்படி இல்ல.

(நாற்காலி நகர்த்தப்படும் ஒலி)

**சதீ:** உமா! ஏன் எழுந்திருக்கிறே? சாப்பிட்டுட்டுப் போ.

**உமா:** நோ, தாங்க்ஸ். எனக்குப் பசி போயிடுச்சு.

**(சில வருடங்களுக்குப்பின்)**

# காட்சி 7 (சுமி, உமா)

### இடம்: கடைத்தெரு

**உமா (உற்சாகமாக):** ஹலோ! சுமி! சுமிதானே? எங்கே பாக்காதமாதிரி போறே?

**சுமி:** ஓ, உமாவா? நல்லா இருக்கியா? நல்ல வேலை கிடைச்சுடுச்சு போல இருக்கு!

**உமா:** ஆமா. படிப்பு முடிஞ்ச கையோட வேலை. ஒனக்கு அவசரம் ஒண்ணுமில்லியே? வா. அந்த சாப்பாட்டுக் கடையில ஒக்காந்து சாவகாசமா பேசலாம்.

(கடையில் பழம்பாடல்)

**சுமி:** நாம்ப சந்திச்சு அஞ்சு வருஷம் இருக்காது? நீ அப்படியேதான் இருக்கே, உமா. என்ன, கொஞ்சம் பூசினாப்போல ஆகிட்டே.

**உமா (சிரித்து):** வயசானா, தானே உடல் எடையும் கூடிடுது. பிள்ளை வேற பெத்துட்டா, கேக்கவே வேணாம்.

**சுமி:** என்ன உமா, ஆச்சரியத்துக்குமேல ஆச்சரியத்தைத் தூக்கிப்போடறே! ஒனக்கு கல்யாணமாயிடுச்சா? (ஏக்கமாக) என்னைக் கூப்பிடலே, பாத்தியா?

**உமா:** ஸாரி, சுமி. நீ இருக்கிற எடம் தெரியல. ஏதோ, இப்பவாவது பாக்க முடிஞ்சதே! சந்தோஷமா இருக்கு, சுமி. ம்? அப்புறம்?

**சுமி:** என்ன?

**உமா:** சும்மா நடிக்காதே. ஒங்க மிஸ்டர்.. அவர் பேரை மறந்துட்டேனே!

**சுமி:** ராமசாமி.

**உமா:** ஓ, ஆமா. மிஸ்டர் ராமசாமியோட நடத்தற குடித்தனம் எப்படிப் போகுது, மிஸஸ். ராமசாமி?

சுமி (மெள்ள): நான் இப்போ அவரோட இல்ல, உமா.

**உமா:** சின்ன வயசா வேற ஒருத்தரா?

**சுமி:** கேளு. எனக்கு நல்லா வேணும். (வருத்தமாக) எனக்குத் தாலி கட்டினாரே, அந்த மனுஷன் தன்னோட போக்கை மாத்திக்கவே இல்ல, உமா.

**உமா:** என்ன சொல்றே?

**சுமி:** அவருக்கு SUGAR DADDY-யா இருக்கிறதில இருந்த கவர்ச்சி, ஒரே ஒரு பொண்ணுக்கு கணவனா இருக்கிறதில இல்ல. அடிக்கடி ராத்திரி வெளியே போய், எங்கேயோ, (ரகசியக் குரலில்) எவளோடேயோ, தங்கிடுவார். ஒரு துப்பறியும் நிபுணரை வெச்சு அவரோட போக்கைக் கண்காணிச்சேன்.

**உமா:** ஐயோ, சுமி!

**சுமி:** நான் கேட்டப்போ, `நீயே அப்படி இருந்தவதானே? என்னைக் கேக்க ஒனக்கு என்ன அருகதைதானே?' அப்படின்னுட்டார்.

**உமா:** ராஸ்கல்!

**சுமி:** அவர் சொன்னது நியாயம்தானே, உமா? நான் என்ன ஒழுங்கு, மத்தவங்களைக் குறை சொல்ல.

**உமா:** இப்போ நீ அவரோட இல்லியா?

**சுமி:** அதான் சொன்னேனே! `நடத்தை கெட்டவ'ங்கிறமாதிரி அவர் குத்திக் குத்திப் பேசுவார். என்னால பொறுக்க முடியாமபோய், விவாகரத்து வாங்கிட்டேன். எங்க கல்யாணம் ரெண்டு வருஷம்கூட நீடிக்கல, உமா. நரகமா இருந்திச்சு.

**உமா:** இப்போ என்ன பண்ணறே, சுமி?

**சுமி:** கோர்ட்டில தீர்ப்பானதால, அவர் மூக்கால அழுதுக்கிட்டு குடுக்கற காசு வருது, மாசாமாசம். (கசப்புடன்) இவரை நம்பி, படிப்பையும் அரைகுறையா விட்டேன்.

**உமா:** சுமி! நீ என்கூட வந்து இரேன்.

**சுமி:** விளையாடறியா, உமா?

**உமா:** நிஜமாத்தான் சொல்றேன். என் வீட்டுக்காரரை மேற்பயிற்சிக்காக வெளிநாட்டுக்கு அனுப்பியிருக்காங்க. திரும்பி வர எப்படியும் மூணு வருஷம் ஆகும். நானும், பாப்பாவும்தான் வீட்டில. எனக்கு துணையா இருக்கும். நீயும் விட்ட படிப்பை தொடரலாம். என்ன சொல்றே?

**சுமி (மனமகிழ்ச்சியுடன்):** உமா!

முற்றும்

# FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

# கணியம் அறக்கட்டளை

### தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

### பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

### தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

**கட்டற்ற மென்பொருட்கள்**

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்

- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்

- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

### வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

## நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**




குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.